தனைசெய்கிறவிஷயத்தில் அவ்வளவு சிரமங்கிடையாது. வெகுசுளுவாயும் அதிகப்பிரயாசையின்றியு மிருக்கிறது. பலமோ மகத் பலத்தையடையத்தக்கதாயும் நித்தியமாயுமிருக்கிறது. அதெப்படியென்றால், அவாளவாளுடைய சக்திக்கதிகமாய் அனேகவஸ்துக்களைக் கொண்டு என்னைக் கஷ்டமாய்ப்பாவித்துக் காமியமாகச் சிரத்தாபத்தியுடனே யாராதனைசெய்பவர்களைப் பார்க்கிலும் அவாளவாளுடையசத்தியனுசாரமாய்ப்பத்திரமானாலும் புஷ்பமானாலும் பழமானாலுஞ் செலமானாலும் என்னைத்தவிர அன்னியமில்லையென்று அகண்டமா யிடைவிடாத திடபத்தியோடே சுத்தாந்தக்கரணனா யிருந்துகொண்டு நிட்காமனாக யாதொருவன் எனக்குச்சமர்ப்பிப்பானோ அவைகளை நான் வெகுபிரியத்தோடுங் கிரகித்துக்கொள்வேன். அதற் கென்ன பலமென்றால் சாஸ்வதமாயும் நித்தியமாயும் பூரணமாயு மிருக்கப்பட்ட என்னுடைய சொரூபத்தையடையும்படிசெய்வேன். (உ௬)

அருச்சுனா! என்னிமித்தமாகப் பத்திரபுஷ்பாதி சம்பாத்தியஞ் செய்வதுகூடப் பிரயாசையாயிருக்கிறதென்று ஒருவேளை யெண்ணுவாயானால் அதைவிடச் சுளுவாயிருக்கப்பட்ட மார்க்கத்தையுஞ் சொல்லுகிறேன்கேள். தேகத்தினா லெந்தெந்தக் கருமங்கள் செய்கிறாயோ, எந்தெந்தவஸ்துக்களைப் பட்சிக்கிறாயோ எந்தெந்தத் திரவியங்களைக் கொண்டு ஓமஞ்செய்கிறாயோ, எந்தெந்தப் பதார்த்தங்களைத்தானங்கொடுக்கிறாயோ, எந்தெந்தத் தபங்கள் செய்கிறாயோ அவைகளை யெல்லாஞ் சிரத்தாபத்தியுடனே யெனக்கே யற்பணஞ் செய்வாயாகில் அதனாலும் நான் முன்போலவே திருப்தி யடைந்தவனாய்விடுவேன். (உ௭)

சுவாமி! இப்படிச்செய்தா லென்னபலம்? அருச்சுனா! இந்தப்படி சகல கன்மங்களும் எனக் கற்பணஞ்செய்வாயாகில் இந்த அனிட்டம் எப்போ தென்னைவிட்டு நீங்கும். இந்த இஷ்ட மெப்போதென்னாலடையப்படுமென் றெண்ணப்பட்ட கோரிக்கை களினாலேயுண்டான சனன மரணமாகிய கன்மபந்தங்களிலிருந்தும் விடுபட்டு என்னைத்தவிர அன்னியமில்லையென்றும் அதுவே தானென்றும் அனுபவமான ஸைசயோக யுத்தனாயிருந்து தேகமுள்ளவரையிலும் நிட்காமனாகத் திரிவிதகரணங்களினாலும் புண்ணியகன்மங்களே செய்துவந்து தேகாந்தத்திற் பரிபூரணமாயிருக்கிறஎன்பதத்தை யப்பிரதிபந்தசாட்சாத்காரமாயடைவாய்.

சுவாமி! உம்மைப் பத்திச்செய்யப்பட்டவர்களுக்கு மோட்சமும், அது செய்யாதவர்களுக்குப் பந்தமுந்தருகிறபோது சீவாளைப்போ லிராகத்துவேஷமுண்டாகுமே? அருச்சுனா! சமஸ்தபூதங்களுக்கும் நான்

சமமாயிருக்கப்பட்டவனானதால் எனக்குப் பிரியமுள்ளவனுந் துவேஷமுள்ளவனுங் கிடையாது; அப்படியிருக்க இருட்டையுங் குளிரையும் போக்கிக்கொள்ளவேண்டுமென்று அக்கினியையுந், தரித்திரமுதலானவைகளைப் போக்கிக்கொள்ளவேண்டுமென்று கற்பக விருட்சத்தையும் அனுசரிக்கப்பட்டவர்களைப்போ லென்னையடைந்து நித்தியசுகமாயிருக்கப்பட்டதை யனுபவிக்கவேண்டுமென்கிறவர்க ளென்னையேயாராதனை செய்து என்னையே தியானிக்கப்பட்டவர்களா யிருப்பதா லென்னையே யடைகிறார்கள். அப்படிப்பட்டவாள் தேகமிருக்கும்போது மென்னிடத்திலேயே யிருக்கிறார்கள் நானும் அவர்களிடத்திலேயே யிருப்பேன் எனக்கும் அவாளுக்கும் எப்போதும் பேதமே கிடையாது. இதன்றித் தேவலோகத்தையடையவேண்டு மென்றிச்சித்து ஆராதனைசெய்யப்பட்டவாள் அந்தலோகத்தையடைந்து திரும்பவுஞ் சனனத்துக்குவந்துவிடுகிறார்கள். இந்தவிதங்களாய் அந்தந்தப்பக்தாளுடையபாவனைகளெப்படியோ அந்தந்தப்படிபலன்களுமடையப்படுகிறார்களே தவிரக்கற்பகவிருட்சம்போலிருக்கப்பட்ட என்னிடத்திற்பட்சபாதம்வரக்காரணமேயில்லை.

சுவாமி ! நல்ல ஆசாரத்தோடே யிருக்கப்பட்டவர்களால் இந்தப் பத்திசெய்யவேண்டுமேயல்லாமல் அப்படி யில்லாதவர்களு மிந்தப்பத்தி செய்தால் மோட்சமடைவார்களா ? அருச்சுனா ! சிரேஷ்டமான ஆசாரத்தோடுங்கூடினவனாகஇருந்துகொண்டென்னைக்கண்டங்கண்டமாய்ப் பாவித்துப் பத்திசெய்யப்பட்டவர்களைப் பார்க்கிலும் பாபநடத்தைகளின்றி மிகவுந் துராசாரநடத்தை யுள்ளவனானாலு மன்னிய தேவதைகளுடைய பக்தனாகாமலெங்கும் நானேயிருக்கிறேனென்றும்எனக்குஞ் சகத்துக்கும் பேதமில்லையென்றும், அகண்டமாயிருக்கப்பட்ட பரமேசுரனாகிய என்னையறிந்து எவன் அநன்னியபத்திசெய்வானோ அப்போதேயவனைச் சற்சனனென்றும், மோட்சத்துக் கதிகாரியாய் விட்டானென்றுஞ் சொல்லப்படும்; எதனாலென்றால், எல்லாவற்றிற்குஞ் சிரேஷ்டமாயும் எதார்த்தமாயுமிருக்கிற நிச்சயத்தையடைந்தவனானதா லவனே சிரேஷ்டனென்பதிலும் மோட்சமே யடைவானென்பதிலும் யாதொரு சமுசயமுந் தேவயில்லை. (௩௦)

சுவாமி ! துராசாரமாய்நடக்கப்பட்டவன் எப்படிச் சிரேஷ்டமாவான் ? அருச்சுனா ! என்னையேநம்பி யென்னிடத்திலேயே சித்தத்தையுடையவனானால் அவன் துராசாரனாயிருந்தாலும் என்னைப் பத்திசெய்த விசேஷத்தினாலே சமஸ்த பாபங்களிலுமிருந்துவிடுபட்டுச் சீக்கிரமாகத் தன்மபரனாய்ச்சாஸ்வதமான மோட்சத்தையேயடைவன். அருச்சுனா !

இதை லோகத்தார் ஒப்புக்கொள்வார்களாவென்று கேட்பாயேயாகில், துராசாரமாயிருக்கப்பட்டவன் பகவானுடைய பக்திமாத்திரஞ்செய்தால் அவன் துற்கதியையடையாமல் மோட்சத்தையே யடைவானென்று மகாத்மாக்களாகிய பிரமநிட்டாளும் வித்வாமிசாளுங்கூடிப் பிரசங்கமுதலானவையுஞ்செய்து கொண்டிருக்கப்பட்ட இராசாக்களுடைய சபைகளிற்போய்க் கையைத்தூக்கிக்கொண்டு நீ பிரதிக்கினை செய்வாயாகில் இந்த வார்த்தையைக் கேட்ட மாத்திரத்திற்சந்தோஷத்தை யுடைத்தானவர்களாகி உனக்குவேண்டிய மரியாதைகளுஞ் செய்வித்து உன்னைச் சிரேஷ்டமாகவுங் கொண்டாடுவார்கள். (௩க)

அருச்சுனா! ஆசாரமில்லாதவர்களைக்கூட நம்முடையபக்தி கரையேற்றிவைக்குமென்றது ஆச்சரியமல்ல: பாபகுலத்திற்பிறந்தவர்கள் முதலாய்நம்முடைய பக்திவிசேடத்தினாற் சம்சாரத்தைக்கடந்துமோட்சத்தையடைவார்க ளென்பதையுஞ் சொல்லுகிறேன்கேள். அருச்சுனா! பாபயோனிகளிற் பிறந்த சண்டாளர்முதலானவர்களானாலும் வேதாத்தியயனங்களுக்குங் கன்மங்களுக்கு மதிகாரமில்லாத பிராமணஸ்திரீகளானாலும் சூத்திரர்களானாலுங் கேவலமா யுழுது பயிர்கள்செய்கிற வைசியரானாலு மென்னுடைய பக்திமாத்திரம் விதி பூர்வமாகச் செய்வார்களேயானாற் சிரேஷ்டமான மோட்சத்தையேயடைவார்கள். (௩உ)

அருச்சுனா! என்னுடையபக்திவிசேடத்தினாலேதேகமே தானென்றுஞ் செகத்துச் சத்தியமென்று மொப்புக்கொண்டு அநித்தியமா யிருக்கப்பட்ட விஷயங்களில் மோகத்தினால் முழுகிச் சார்வதா துக்கத்தையடைந்திருக்கப்பட்ட கேவலமான புருஷாளும் ஸ்திரீகளும் துராசாரநடத்தை யுள்ளவர்களும் துற்குலத்திற் பிறந்தவாளாயு மிருக்கப்பட்டவாள்கூட மோட்சத்தை யடையும்படியாக இருக்கையிற் சிரேஷ்டமான குலங்களிற்பிறந்து நல்ல ஆசாரங்களோடுங்கூடி நம்மைப் பக்திசெய்யப்பட்ட பக்தாளாகிய பிராமணாளுக்கும்ராஜரிஷிகளுக்கும் மோட்சமுண்டாவதற்குக் கேட்கவாவேண்டும். ஆனதால் அருச்சுனா! உன்னுடைய சரீரம்அநித்தியமாகவுஞ் சுகமில்லாததாகவுமிருப்பதால்இனிக் காலதாமசம்பண்ணாமல் அநித்திய சுகம் வேண்டுமென்கிறதிலிச்சையை விட்டு நித்தியமாயுஞ் சுககரமாகியுமிருக்கிற நம்மை யடையும்படியான பத்தியேசெய்யவேண்டும். (௩௩)

சுவாமி! எல்லாந் தாமேயென்று பக்திசெய்யும்படியாகவு மனுக்கிரகஞ்செய்தீர்கள். இப்போது சந்தித்திருக்கிற யுத்தத்தைப்பண்ணும்படியாகவும் அனுக்ரகஞ்செய்கிறீர்கள்; இவைகளினாலே நானெவ்வித

மாகப் பக்திசெய்யவேண்டுமோ அதை யனுக்ரகம்பண்ணவேண்டும். அருச்சுனு ! எதைப்பார்த்தாலும் அன்னியமா நினையாமல் நாமேயிருக்கிறோமென்று நினைக்கவேண்டும்நம்முடைய தாசனுக இருந்துகொண்டு எதைப் பூசித்தாலும், நம்மையே பூசிக்கிறோமென்று பூசிக்கவேண்டும். எவைகளுக்கு நமஸ்காரஞ்செய்தாலும் நமக்கே நமஸ்காரஞ் செய்கிறோமென்று செய்யவேண்டும் இதுவுமன்றி நாமே யெங்குமிருக்கிறோமென்றும் நம்மைத்தவிர அன்னியமில்லவேயில்லையென்றும் அதனுல் நம்மையடைகிறதே மிகவுஞ் சிரேஷ்டமென்றுந் திடமாக ஆந்தரத்திற் சார்வதா வைத்துக்கொண்டு பாகியத்தி லுன்னுடைய திரிவிதகரணங்களினுலுஞ் சுதன்மங்களை நிட்காமனுய்ச் செய்துவருவாயாகிற் பரமாநந்த சொரூபமாகிய நம்மையே நீயடைவாய். (ஙச)

ஏழாமத்தியாயம், எட்டாமத்தியாயம் இவைகளிற்சொன்ன விபூதிகளுக்கு மதிகமாயிருக்கப்பட்ட விபூதிகளையுந் தன்னுடைய பக்திவிசேடத்தையும் அப்படிப்பட்ட பக்திசெய்யவேண்டியகிரமத்தையும் அனுக்ரகஞ்செய்த பகவானுகிய யாதொரு கிருஷ்ணமூர்த்தியுண்டோ அவருக்கு நமஸ்காரஞ்செய்கிறேன்.

ஒன்பதாவது

இராசகுய்யயோக அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் கூ-க்குச் சுலோகம்-ஙஎஉ.

ஸ்ரீதேவகிநந்தனனே துணை.



உ

ஸ்ரீவாசுதேவாயநம:

பத்தாவது

## விபூதி அத்தியாயம்.



அவதாரிகை:—முன்சொன்ன ஏழு எட்டு ஒன்பது இந்தஅத்தியாயங்களிற் பகவானுனவர் தன்னுடைய விபூதிகளைச் சங்க்ரகமாகச்சொல்லி அவைகளையெல்லாம் தானேயென்று பத்திபண்ணும்படியாகச் சொன்னதுந்தவிர இப்போது விஸ்தாரமாயும் ரகசியமாயுமிருக்கப்பட்ட தன்னுடைய விபூதிகளைத்தெரிந்து அவைகளையும் தானேயென்று பக்திசெய்யவேண்டுமென்கிற அபிப்பிராயத்தினுலே யந்தவிபூதி

களை இந்தப் பத்தாம் அத்தியாயத்தில் விஸ்தாரமாகச் சொல்லத்தொடங்குகின்றார். அருச்சுனா! ஏழு எட்டு ஒன்பது இந்த அத்தியாயங்களில் நாம்சொன்ன நம்முடைய விபூதிகளைக்கேட்டுச் சந்தோஷத்தையடைந்திருக்கிற உனக்கு இதஞ்செய்யவேண்டுமென்று நினைத்துப் பரமமாயிருக்கிற விஸ்தாரமான நம்முடைய விபூதிகளையறிந்து பத்திசெய்யும்படியாகத் திரும்பவும் உனக் குபதேசம்பண்ணுகிறோம். (௧)

அருச்சுனா! இப்போது நாம் சொல்லப்போகிற நம்முடைய மகிமையை யுடைத்தான விபூதிகளை யொருவரும் அறியமாட்டார்கள்; முப்பத்துமுக்கோடிதேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகள் முதலிய இவர்களாலேயும் அறிகிறதற்குத் துர்லபமாயிருக்கும். நம்முடைய அநுக்கிரகமுண்டானால் மாத்திரம் அறியலாமேயல்லாமல் வேறேயெந்த எத்தனங்களினாலும் அறியத்தக்கதல்ல (௨)

சுவாமி! இதையறிந்ததனாலே பலமென்ன? அருச்சுனா! சனனமில்லாதவனும் அனாதியாயும் லோகங்களுக்கெல்லாம் மயேசுரனுமிருக்கிற நம்மை யெதார்த்தமா யார் அறிகிறார்களோ அவாள் மனுஷாளுக்குள் சிரேஷ்டாள்; அல்லாமலும் சமஸ்த மோகங்களிலும் சமஸ்த பாபங்களிலுமிருந்து விடுபட்டு நம்முடைய பதத்தையேயடைவார்கள். (௩)

அருச்சுனா! சகலலோகங்களும் நம்முடைய விபூதியினால் விளங்குகின்றதென்கிற விபரத்தைச் சொல்லுகிறேங் கேள். நல்லது பொல்லாதது என்று நிச்சயிக்கிற புத்தியும் எல்லாமாய் நாமே இருக்கிறோமென் றறியப்பட்ட ஞானமும் நம்மைத்தவிர அன்னியமில்லை யென்கிறதே மோகமன்றியிலிருக்கிறதும் ஒருவரால்வரப்பட்ட இடஞ்சல்களைச் சகிக்கிறதே பொறுமையும் எது நடந்தாலும் எது வசனித்தாலும் சரியாக நடக்கிறதும், சரியாக வசனிக்கிறதும் சத்தியமும், துர்விஷயங்களிற் போகாமல் தடைசெய்யப்பட்டதே பாகியேந்திரியங்கள் நிக்ரகமும் அன்னியசிந்தனைகள் செய்யாமற் பகவானையே நினைக்கும்படி செய்யப்பட்டதே ஆந்தரிந்திரிய நிக்ரகமும் சீதோஷ்ணாதிகளினால் வரப்பட்ட சுகமுந் துக்கமும் சனனமும் சனனமில்லாமையும் பயமும் பயமில்லாமையும். (௪)

இராகத்துவேஷமின்றி யிருக்கிறதே சமத்துவமும் அயிம்ஸையும், சந்தோஷமும், தபசும், தானமும், கீர்த்தியும், அபகீர்த்தியும் இவை முதலான இன்னம் நாநாவிதமான பாபங்களெல்லாம் சமஸ்த பிராணிகளுக்கும் நம்மிடத்தி லிருந்துண்டாம். நிராகாரசொரூபமாயிருக்கிற நம்மிடத்தில் இவைகளெல்லாம் எப்படி யுண்டாகலாமென்றால் அவா

ளவாளுடைய கன்மானுகுணமாக அவாளவாள் பாவனைப்படி நம்மு டைய பிரகிருதியினு லுண்டாகப்பட்டதை நம்மாலே யுண்டானதாகச் சொல்லுகிறதேதவிர நாமொன்றுஞ்செய்யவேயில்லை. (ரு)

அருச்சுனு! பிருகுரிஷிமுதலான சப்தரிஷிகளும், சனக, சனந்தரர் முதலான ஞானவந்தாளாகிய நான்குபேர்களும், பதினான்குமனுக்க ளுஞ் சமஸ்த தூலதேக அபிமானியாகிய இரணியகர்ப்பனென்னப் பட்ட என்னுடைய பிரகிருதியான மனோசங்கற்பத்தினு லுண்டானூர் கள். அவர்களெல்லா மென்னுடைய அம்சாரூபாளே யவாளாலேசகல பிரபஞ்சமு முண்டாச்சுது, பிரமதேவனாலே சிருட்டியுண்டானதாகச் சாத்திரபுராணங்களிற் சொல்லப்படுகிறதேயென்றால் அந்தப் பிரமதே வரும் என் சங்கற்பத்தினாலேயே யுண்டானவரே அப்பாலவர் மனோ சங்கற்பத்தினாலே சிருஷ்டியுண்டானதென்கிறதும் சரியே, இனி யுன் மனசினாலே யந்தச் சிருட்டியுண்டானதென்றும் நாமே நீயாகும்போது உனக்கே அதனுடைய நிசந்தெரியவரலாம். (சு)

சுவாமி! இவ்விதமாய்ச் சகலமும் உம்முடைய விபூதியென் றறிந்த தனு லென்னபலன்? அருச்சுனு! என்னுடைய விபூதியையும் யோகமக த்துவத்தையும் யதார்த்தமா யாதொருவ னறிவானோ அவன் நம்மிடத் தில் அஞ்சலமாயிருக்கப்படாநின்ற தியானயோகத்தையடைவன், இத ற்குச் சமுசயமில்லை. (எ)

சுவாமி! உம்முடைய விபூதியையறிந்ததனாலே தியானயோகத்தை யெப்படியடைவார்கள்? அருச்சுனு! சொரூபமா யிருக்கப்படாநின்ற சகல பிரபஞ்சங்களும் உற்பத்தியாகிறதற்கும், அவைகள் விருத்திய டைந்து விவகரிக்கப்படுகிறதற்கும் நாமே காரணமென்றும் நம்மைத் தவிர அணுமாத்திரங்கூடச் சலிக்காதென்றும் நம்முடைய விபூதிமகி மையையறிந்த விவேகமுள்ள நம்முடைய பக்தாள் பிரீதிபூர்வமாகவும் அநநியமாக நம்மையே யுபாசிப்பார்கள். (அ)

அருச்சுனு! இன்னம் அந்தப் பக்தாளானவாள் என்னிடத்திலே யேயிடைவிடாதசித்தமும் பிராணனு முண்டானவர்களாய் நம்மையே பாகியத்திற் பூசைபண்ணுவார்கள். நம்முடைய மகத்துவங்களையும் நம்முடைய திவ்யமான சரித்திரங்களையும் நம்முடைய கீர்த்தி களையும் தனியேயிருக்கும்போது வசனித்துக்கொண் டிருக்கிறது மல்லாமல் தான்போதிக்கத் தக்கவர்களுக்குப் போதித்துக்கொ ண்டும் இருக்கிறதனாலேயும் அவைகளிடத்தில் எதார்த்தமாய்ச் சந் தோஷத்துடன் ஆனந்தத்தையு மடைந்துகொண்டிருப்பார்கள். அப் பேர்ப்பட்ட புருஷாளுக்கு நம்முடைய யெதார்த்தமான ஞானத்தை

யனுக்கிரகஞ்செய்வித்துச் சனன மரண துக்கத்துடன் கூடியிருக்கிற சம்சாரபந்தத்திலிருந்தும் நிவிர்த்திசெய்து மோக்ஷத்தை யடையும்படியாகவும் பண்ணிவைப்போம். (௯)

சுவாமி! நிராகார ஸ்வரூபமாயிருக்கிற தேவரீர் எவ்விதமாக ஞானத்தை யநுக்ரகஞ்செய்வீர்? அருச்சுனா! எப்போதும் நம்மிடத்திலேயே தியானபராளாயும் பிரீதிபூர்வமாகவும் நம்மைப் பக்திபண்ணப்பட்டவர்களுக்கு எந்தப் புத்தியினாலே நம்மை யடைவார்களோ அப்பேர்ப்பட்ட புத்தியோகத்தை நாம் கொடுப்போம். (க0)

சுவாமி! அப்படிப்பட்ட புத்தியோகத்தைத் தேவரீர் எங்கேயிருந்தெவ்விதமாய்க்கொடுப்பீர்? அருச்சுனா! நம்முடைய பக்தாளை யநுக்கிரகஞ்செய்யவேண்டி அவர்களுடைய புத்திக்குச் சாக்ஷியாகவும் அந்தரியாமியாகவும் நாமிருப்பதனாலே அவ்விடத்திலிருந்து அந்தப்புத்திக்கு நாம் சோதகம் பண்ணிவைத்துக்கொண்டிருப்போம். அந்தச் சோதகத்தினாலே பிரகாசரூபமாகிய ஞானமென்கிற தீபமுண்டாகி அஞ்ஞானத்தினாலுண்டான சமுசாராந்தகாரத்தை விலகும்படி பண்ணிவைத்து நம்முடைய சொரூபத்தை யடையும்படியாகவும் செய்விப்போம். (கக)

அவதாரிகை:—ஏழு எட்டு ஒன்பது இந்த அத்தியாயங்களிற் சொன்ன முக்யமான விபூதிகளை யெல்லாம் பார்க்கும்போது பகவானைத்தவிர அன்னியமில்லையென்றும், அப்பேர்ப்பட்ட விபூதியையுடைத்தான பகவானை யேகதேசமாய் ஒரு விசேஷமாகிய புருஷனைப்போல நா மிதுவரைக்கும் எண்ணிக்கொண்டிருந்தது மிகவுங் கேவலமான புத்தியென்றும், பகவானுடைய ஸ்வரூபத்துக்கு ஆதியும் அந்தமு மிருக்க மாட்டாதென்றும் புத்திக்குச் சமுசயமின்றிநிச்சயப்பட்டபடியினாலே அருச்சுனனானவன் பகவானைப்பார்த்துத் துதி செய்யத் தொடங்குகின்றான். சுவாமி! பரப்பிரமஸ்வரூபராயும் சமஸ்தபாபங்களினுமிருந்து பாவனஞ்செய்யத்தக்கவராயும் எல்லோரும் அடைகிறதற்கு ஸ்தானமாயும், மிகவும் அத்யந்தம் சிரேஷ்டமுள்ளவராயும், சுயம்பிரகாசஸ்வரூபராயும், சாஸ்வதராயும், நித்தியராயும், திவ்விய புருஷராயும், எல்லாத் தேவதைகளுக்கும் ஆதிதேவராயும்! சனன மரணரகிதராயும், எங்கும் வியாபகராயும் தேவரீர் இருக்கப்பட்டவரென்றும், இப்போது அடியேனுக்குத் தெரியவந்தது. (கஉ)

அருச்சுனா! இதுவரையும் நம்மை நானாவிதமாகப் பாவித்திருந்த நீ இப்போதொருவிதமா யெப்படிச் சொல்லுகிறாய்? சுவாமி! சப்தரி

ஷிகளும்,தேவரிஷியானநாரதரும், அசிதனும்தேவலனும்வியாசமுனீந்திரனும்இன்னமிருக்கப்பட்ட மகான்கள்முதலானவர்களும்இப்போது நானிச்சயித்துச்சொன்னபடிக்கே சொல்லிக்கொண்டிருப்பார்கள், தேவரீரும்அப்படியே பலதடவைகளிலும்அநுக்ரகஞ் செய்திருக்கிறீர்கள் அதனாலேயுந்தேவரீருடைய விபூதிமகிமைகளை இப்போது பார்க்கிறதனாலேயும்என்புத்திக்குஇப்போதுசரியாய் நிச்சயப்பட்டுநானுஞ்சொன்னேன்.

சுவாமி! தேவரீர் எனக்குபதேசிக்கப்படாநின்ற எல்லா அர்த்தங்களும் நிசமென்றெண்ணுகிறேன். சட்குண ஐஸ்வரிய சம்பன்ன! தேவாதிகளாலேயும் அசுராளாலேயும் உம்முடைய நிசரூபத்தை யறியக்கூடாது. (கச)

சுவாமி! பின்னை யார்தானறிவார்களென்று கேட்பீர்களேயாகில் சமஸ்தபூதங்களையுமுண்டாக்கி அவைகளைத் திதி யடையும்படியாகவுஞ் செய்வித்து அந்தப் பூதங்களுக்கெல்லா மீசுரனாக இருந்துகொண்டு அவாளவாளுடைய கன்மானு குணமாகப் பலன்களையுங் கொடுத்துக்கொண்டு ஆதித்தனுதிப் பிரகாசங்களுக்கெல்லாம் பிரகாசரூபமாயிருந்துபிரகாசித்துக்கொண்டும், செகத்தியாவும்புருஷோத்தமராயுமிருக்கப்படாநின்ற தேவரீருடைய ஸ்வரூபத்தை தேவரீரே யறியவேண்டுமே யல்லாமல் வேறே யொருவருமறியமாட்டார்கள். (கரு)

சுவாமி! தேவரீர்எந்தவிபூதிவிசேஷத்தினாலேயிந்தச்சகங்களெல்லாம் வியாபித்திருக்கிறீர்களோ அப்படிப்பட்ட ஆச்சரியகரமாயும்திவ்யமாயுமிருக்கப்படாநின்றஉம்முடைய விபூதிகளைச்சிருட்டியுண்டானபிறகு உண்டானவாளாலே விபரமாகத் தெரியக் காரணமில்லாததனாலே அவைகளையெல்லாம் சொல்லுகிறதற்குத் தேவரீரே தகுந்தவர் சமஸ்தமும் அவிடத்துக்கே தெரியவரலாம். (கசூ)

சுவாமி! யோகீசுராளுக்கெல்லாம் யோகீசுரரே யெப்போதும் நானும்மை யெவ்விதமாகச் சிந்திக்கவேண்டுமோ எவ்விதமாத் துதிபண்ணவேண்டுமோ எந்தெந்த விபூதிபாவங்களைத் தாமாக நான் சிந்திக்கிறதற்குத் தகுந்ததாயிருக்குமோ அவைகளை நான் தெரியாதவனாயிருக்கிறேன். (கஎ)

ஆகையாற்சனார்த்தன! தேவரீருடையயோகமகத்துவத்தையும்விபூதிவிசேஷங்களையும்எந்தெந்தவஸ்துக்களில் தேவரீரையெப்படியெப்படிச்சிந்திக்கவேண்டுமோஅவைகளையெல்லாம்சவிஸ்தாரமாகத்திரும்பவும் அநுக்ரகம் பண்ணவேண்டும். தேவரீருடைய வாக்கியங்களாகிற அமிர்தத்தை யெவ்வளவு கேட்டாலுந் திருப்தியடையாதவனா யிருக்கிறேன்.

அருச்சுனா! நம்முடைய விபூதிகளெல்லா வற்றையும் வசனிக்கிற
குச் சக்கியமாகாது; ஆனதாற் றெய்வசம்பந்தமான திவ்யரூபங்களா
என்னுடைய விபூதிகளிற் பிரதானமாயிருக்கிற விபூதிகளை மட்டும்
பரமாய்ச் சொல்லுகிறேன். இவைகளை யறியும்போது மற்ற விபூதி
ளெல்லா மதற்கு ளந்தர்ப் பூதமாய்விடுகிறதுந்தவிர எல்லாவிபூதிகளை
மறிந்தா லெந்தப்பலனுண்டோ அந்தப்பலனே யிவைகளினு லுண்டா
ம். நாம் சொல்லப்பட்ட விபூதிகளிற் சில என்னுடைய சொரூபமாக
பாவனை செய்யவேண்டும்; சிலவற்றில் மாயாகாரியமான சடாம்ச
கிய நாமரூபத்தைத்தள்ளி நம்மைச் சைதன்யமாத்திரமாகப் பாவனை
ண்ணவேண்டும். (கசு)

அருச்சுனா! சகலபூதங்களுடைய இருதயத்தில் அந்தரியாமியாக
க்கப்படாநின்ற பரமாத்மாயாரோஅவரேநாம், சர்வசராசரமான
ரபஞ்சமுண்டாகிறதற்கும் அவைகள் திதி யடைகிறதற்கும் அவை
ர லயமடைகிறதற்குங் காரணமா யிருக்கப்பட்ட தெதுவோ அது
ம் நாமே. இவைகளினாலேயே சமஸ்தவிபூதிகளு மறிந்துகொண்ட
னாலும் அந்த நிச்சயத்தை யாந்தரத்தில் வைத்துக்கொண்டு பாகி
ந்திற் பத்திசெய்யவேண்டி நீ கேட்டபடிக்கு முக்கியமான விபூதிகளை
ம் சொல்லுகிறேன்கேள். (உ௦)

அருச்சுனா! துவாதசாதித்தாளுக்குள் விஷ்ணு நாமத்தை யுடைத்
ன ஆதித்தன் நாம், பிரகாசங்களிலே சூரியப்பிரகாசம் நாம், சப்த
யுவுக்களில் மரீசியென்னப்பட்ட வாயுவு நாம், நட்சத்திரங்களிற் சந்
ரன் நாம். (உக)

வேதங்களுக்குள்ளே உபதேசவாக்கியங்களைச் சொல்லப்பட்ட
மவேதம் நான்; தேவதைகளுக்குள்ளே தேவேந்திரன் நாம்; இந்திரி
ங்களுக்குள்ளே மனசு நாம்; சமஸ்த பூதங்களிலு மிருக்கப்பட்ட ஞா
ம் நான். (உஉ)

ஏகாதசருத்திராளுக்குள்ளே சுகத்தைக்கொடுக்கப்பட்ட சங்கரன்
ன்; எட்சராக்ஷசாளுக்குள்ளே குபேரன் நான்; அஷ்ட விசுக்களுக்
ள்ளே பாவகன் நான்; மலைகளுக்குள்ளே மேருபருவதம் நான். ()

புரோகிதாளுக்குள்ளே முக்கியமான பிரகஸ்பதி நான். சேனாதி
திகளுக்குள்ளே சுப்பிரமணியர் நான்; நதிகளுக்குள்ளே சமுத்திரம்
ன். (உச)

அருச்சுனா! மகாரிஷிகளுக்குள்ளே பிருகுமகாரிஷி நான்; மந்திரங்
ளிற் பிரணவமந்திரம் நான்; எக்கியங்களுக்குள்ளே செப எக்யம்
ன்; அசைவில்லாததுக்குள்ளே யிமையபருவதம் நான். (உரு)

அருச்சுனா! விருட்சங்களுக்குள்ளே அசுவத்தவிருட்சம் நா
தேவரிஷிகளிலே நாரதனான்; கெந்தருவாளுக்குள்ளே சித்திரத்தே
னன்; சித்தாளுக்குள்ளே கபிலமுனிநான். (௨

அசுவங்களுக்குள்ளே உச்சைசிரவம்நான்; கெஜங்களுக்குள்
அயிராவதம் நான்; புருஷாளுக்குள்ளே பிராசாக்கள் நான். (௨

அருச்சுனா! ஆயுதங்களுக்குள்ளே வச்சிராயுதம் நான்; பசுக்க
குள்ளே காமதேனு நான், பிரசைகளுற்பத்தியாகிற மன்மதம் நா
சர்ப்பங்களுக்குள்ளே வாசுகிநான். (௨

அருச்சுனா! விஷயமின்றியிருக்கிற நாகாளில் ஆதிசேடன் நா
சலத்திற் சஞ்சாரம்பண்ணப்பட்ட சகலசீவாளுக்கும் ராசாவாகிய
ணன் நான்; பிதிர்க்களுக்குள்ளே யரியமன் நான்; தப்பாமற் றண்
கிறவர்களுக்குள்ளே யியமதன்மராசனான். (௨

அசுராளுக்குள்ளே பிரகலாதன் நான்; நிமிஷமுதற் கணக்குக்
ஸப்படா நின்ற காலம் நான்; மிருகங்களுக்குள்ளே சிங்கம் நான்; ப
களுக்குள்ளே கருடன் நான். (

அருச்சுனா! வேகங்களுக்குள்ளேவாயுவேகம் நான்; வில்வித்
யுடைத்தானவாளுக்குள்ளே ரெகுபதிநான்; மச்சங்களுக்குள்
ராசாவாகிய மகரமச்சம் நான், நதிகளுக்குள்ளே கெங்காபவானி நா

அருச்சுனா! சகல பிரபஞ்சங்களுக்கு மாதியாகிய சிருஷ்டி
மத்தியாகிய திதியும் அந்தமாகிய சம்மாரமும் இந்தமூன்றும் நா
சமஸ்த வித்தைகளுக்குள்ளேயும் அத்யாத்ம மென்னப்பட்ட பி
வித்தைநான்; வாதங்களுக்குள்ளே தான் பிடித்தகாரியம் செ
வேண்டுமென்று அதற்கநுசரணையாக நியாயமோ அநியாயமோ
வருக்கொருவர் செய்யப்பட்ட வாதங்களுக்குச் செற்பமென்று செ
லப்படும். தனக்கொன்றும் பிரயோசனமில்லாமல் எதிரிக்குமட்
குறைவுசெய்ய வேண்டுமென்று நினைத்தவனுக் கெந்த இடக்க
பூஷணமு முபகாரமு முண்டாயிருக்குமோ அவைகளைக் கெடுத்
போடும்படியாக அவாளிடத்திற்போய்ப் பேசப்பட்ட வாதமுதல
வைகளுக்கு விதண்டமென்றுசொல்லப்படும். ஆத்ம ஞானத்தைப்
றிச் சஞானஸ்தாளாவது அல்லது அதற்குக் கீழ்ப்பட்ட மூடம
களாவது இவாள் ஒருவருக்கொருவர் செய்யப்பட்ட வாதங்கசெ
வோ அதற்கு வாதமென்று சொல்லப்படும். இந்த மூன்றுவாதத்
லும் முன்சொன்ன ரசோகுண தமோகுணமாகிய இரண்டுவாதங்க
நாமல்ல; சத்துவகுணமாகிய மூன்றுவதுசொன்ன வாதமேநான். (

அருச்சுனா! அக்ஷரங்களுக்குள்ளே யெந்த அக்ஷரங்களுக்குஞ் ர்ந்து பிரகாசிக்காநின்ற அகார அக்ஷரம் நான், சமமென்று சொல் பட்டவைகளுக்குள் ராமனென்றுங் கிருஷ்ணனென்றுஞ்சொன்னால் வைக ளெப்படிச்சமமோ அப்படிப்போலேயிருக்கப்பட்ட சமங்க ளெல்லாம் நான்; காலங்களுக்குட் சிருஷ்டியுண்டானபோதும் ஸ்திதி னபோதும் அவைகள் லயமடைந்தபோதும் அக்ஷயமாயிருக்கப் டாநின்ற காலமெதுவோ அந்தக்காலம் நான்; கன்மங்களுக்குள் அந் தந் சீவர்களுடைய கன்மானுகுணத்துக்குத்தகுந்தபலன்களைக்கொடுக் பட்ட தெதுவோ அந்தக்கன்மங்கள் நான். (௩௩)

சர்வமுஞ் சங்கரிக்கிறதில் மிருத்திவு நான்: சமஸ்தபூதங்களையும் ந்தந்தப்படி யுண்டாகப்பண்ணப்பட்ட சத்தியெதுவோ அதுநாம்; திரீகளில் நல்லகீர்த்தியும் லக்ஷுமீகரமும் நல்லதர்மமும் வரப்போகிற ரியத்தில் யூகிக்கிற ஸ்மிருதியும் முன்நடந்திருக்கிற விஷயங்களைத் ரணைசெய்யப்பட்ட சித்தமுந் தைரியமுஞ் சமையும் இவைகளெல் ம் நாமே. (௩௪)

அருச்சுனா! யாகாதிகளைக்குறித்து வசனிக்கப்பட்ட மந்திரங்களிற் தேவேந்திரனைக்குறித்துச் சருவதேவநாத்மகமாய்ச் சொல்லப்பட்ட மவேதமந்திரமெதுவோ அதுநான்; சந்தஸ்களுக்குள் காயத்திரி சந் நான்; மாசங்களுக்குள்ளே சமஸ்த தேவாலயங்களிலும் விசேஷகர கப் பூசைமுதலானவைகளுஞ் செய்வித்துக் கொண்டாடப்பட்ட ர்கழிமாதம் நான், இருதுகளுக்குள்ளே தேவாலயங்களி லுச்சவாதி நும் பிரசைகளுக்கு விவாகாதி முதலான சுபங்களும் நடக்கப்பட்ட த்திரை வைகாசிமாதமாகிய வசந்தருது நான். (௩௫)

அருச்சுனா! வஞ்சனைக்குட் சொக்கட்டாளுட்டத்தில் அவனவ ஷ்டப்படிக்குப் பகடைகள் விழும்படியாசப்பண்ணப்பட்ட சத்தி துவோ அதுநான்; தேயிசுகளுக்குள்ளே தேவாலயங்கள் பிரமால கள் முதலானவையுஞ் செய்யப்பட்டதனுலுண்டான கீர்த்தியாகிய யிசெதுவோ அதுநான், எந்தெந்தப் புருஷாளாலே யெந்தெந்தச் யமடைகிறார்களோ அந்தந்தச் செயமெல்லாம் நான்; எந்தெந்த விஷ களைப்பற்றி யெந்தெந்தப் புருஷாள் முயற்சிசெய்வார்களோ அந்தந்த பற்சியெல்லாம் நான், சாத்துவீகவந்தாளுக்குள் அன்னிய சங்கற்ப ன்றியிருக்கப்பட்ட சாந்தமெதுவோ அதுநான். (௩௬)

அருச்சுனா! யாதவவம்சாளுக்குள் வசுதேவபுத்திரனுகிய இப் ாது பிரத்தியட்சமா யுனக்குபதேசஞ்செய்யப்பட்ட வாசுதேவனும்

நானே; பாண்டவாளுக்குள்ளே தனஞ்சயனென்னப்பட்ட நீயும்நாமே; முனீசுராளுக்குள் வியாசமுனிநாமே; திரிகாலங்களும், அறிஇறவர்களுக்குட் சுக்கிரபகவாளுமே. (௩௭)

அருச்சுனு! தண்டனைகளில் யாவரையும் வசப்படுத்தும் படியான தண்டனையெதுவோ அதுநாம்; நீதிகளி லெவர்களைச் செயிக்கவேண்டுமோ அவர்களுக்குப் போதிக்கப்பட்டதனலே யவர்களொப்புக்கொண்டுடன்பட்ட நீதியெதுவோ அதுநாம்; இரகசியங்களுக்குள்ளே அன்னிய சங்கற்பமின்றித்தானே தானுயிருக்கப்பட்ட மவுனரகசியமெதோ அது நாம்; சகலசீவாளுடைய ஞானங்களுக்குள் தத்துவந்தெரிந்த ஞானவந்தாளுடைய ஞானம் நான். (௩௮)

அருச்சுனு! சகலபூதங்களுக்கு முற்பத்தியென்ன திதியென்ன லயமென்ன இந்த மூன்றுக்குங் காரணமான பீஜமும் நாமே; இந்தச் சராசராத்மகமான பிரபஞ்சங்களெல்லாம் நம்மைக்காட்டிலும் அணுமாத்திரங்கூட அன்னியமேகிடையாது; இதனலே யெல்லாம் நாமேயாகியிருக்கிறோம். (௩௯)

அருச்சுனு! நம்முடைய திவ்வியமான விபூதிக்குப் பிரமாணஞ் சொல்லமுடியாது; அப்படிக்கு விஸ்தாரமாயிருக்கப்பட்ட விபூதிகளினுன்புத்தி கிரகிக்கும்படியான தெவ்வளவோ அவ்வளவுமாத்திரம் சிரேஷ்டமாயிருக்கிற விபூதிகளைமட்டுஞ் சங்க்ரகமாகச்சொன்னேம். ()

அருச்சுனு! இவ்விதமாய் நாம்சொல்லியிருக்கையிலு மின்னமுமெல்லாவிபூதிகளும் விபரமாய்க்கேட்க வேண்டுமென்று உனக்குட் பிரியமுண்டாயிருப்பதனலே அவைகளெல்லாம் நாம்சொன்னலும் நீயறியச் சக்திவந்தனல்லாததனலே யெல்லாவற்றையு மறியத்தக்கதானசுளுவாகிய ஒரு மார்க்கத்தைச் சொல்லுகிறோங்கேள் அருச்சுனு! சகலலோகங்களிலும் ஐஸ்வரியங்களோடும் பிரகாசத்தோடும் மகிமையோடும் அதிகசிரேஷ்டத்தோடும் பலன்களோடுங்கூடி யெந்தெந்தஸ்தலங்களிடத்திலும் எந்தெந்தவஸ்துக்களிடத்திலும் விளங்குகின்றனவோ அவைகளெல்லாம் நம்முடைய முக்கியமான விபூதிகளென்றும் நம்முடைய அம்சத்தினு லுண்டானதென்றுமறி. (சக)

அருச்சுனு! உன்னுடையசித்தம் பகிர்முகமாகும்போது நீ பத்திசெய்ய நம்முடைய விபூதிகளைத் தெரியவேண்டுமென்று கேட்டதற்குப் பரிச்சின்னத்தோடும் வெகு பிரகாரமாக முக்கியமாயிருக்கப்படாநின்ற விபூதிகளைமட்டுஞ் சங்க்ரகமாக நாம் சொன்னேம். அப்படிப்பட்ட விபூதிகளைமட்டுந் தனித்தனியே நீ பத்திசெய்வதனலே பூரணமான

ானத்தையும், பிரயோசனத்தையு மடையமாட்டாய். எதனாலென்
ல் நீ யெப்போதும் சகல பிரபஞ்சங்களிடத்திலும் நம்முடைய
காம்சத்தினால் வியாபிக்கப்பட்டு விளங்குகிறபடியினாலே தனித்தனியே
பத்திசெய்தால் விபசாரபத்தியாக முடியுமே யல்லாமல் அவிபசார
த்தியாகமாட்டாது. ஆகையால், சகல பிரபஞ்சமாகிய சமஸ்த வஸ்
க்களிடத்திலும் நாமேயிருக்கிறோமென்றும், நம்மைத்தவிர அன்னிய
ல்லையென்றும் திடபத்தியுடனே அவிபசார பத்திசெய்யவேண்டும்;
ப்போதுதான் பூரணப் பிரயோசனமாகிய கைவல்யபதத்தைத் தப்பா
ல் நீ யடைய அதிகாரியாவாய். (சஉ)

இந்திரியங்கள் வழியாகச் சித்தம் பகிர்முகமானால் எந்த வஸ்துக்
ளைப் பார்த்தாலும் பகவத்பாவனையே பண்ணவேண்டுமென்கிற அபிப்
ாயங்கொண்டு தன்னுடைய விபூதிகளைப் பத்தாமத்தியாயத்தினாலே
நுக்ரகஞ்செய்த யாதொருபகவானுண்டோ அவருக்கு நமஸ்காரஞ்
ெய்கிறேன்.

பத்தாவது

விபூதி அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௧0-க்குச் சுலோகம்-சகச.

பரமகுருவேதுணை.

---

உ

ஸ்ரீலீலாமானுஷவிக்கிரகாயநம:

பதினொருவது

# விசுவரூப அத்தியாயம்.

அவதாரிகை:-பகவானானவர் விபூதிமகிமையை அநுக்ரகஞ்செய்த
ாலே அந்தவிபூதிஸ்வரூபமாகிய விசுவரூபத்தைக்காணவேண்டுமென்று
ருச்சுனன் அபேட்சிக்க, அந்தப்பிரகாரமே தன்னுடைய விசுவரூபத்
தைக் காண்பித்த விபரங்களை யிந்த.அத்தியாயத்திற் சொல்லப்படுகிறது.

அவதாரிகை:—முந்தின அத்தியாயத்தின் முடிவிலே சகல பிரபஞ்
சங்களையும் ஏகாம்சத்தினால் வியாபித்துக்கொண்டிருக்கிறோமென்றனு
கஞ்செய்த பகவானைப்பார்த்து அப்படி வியாபித்திருக்கிற ஸ்வரூபத்
தைத் தான் பிரத்தியட்சமாய்க் காணவேண்டுமென்று ஆந்தரத்தி லிச்

சையுடையவனாய் அருச்சுனனானவன் பகவானைப்பார்த்துப் பிரார்த்தி
கிறான். சுவாமி! அடியேனை யநுக்ரகஞ்செய்து இரட்சிக்கிறநிமித்தம
இரகசியமாயிருக்கப்படாநின்ற அத்யாத்மநமாகிய ஸ்வரூபஞானத்தை
யுபதேசித்ததனாலே யென்னுடைய மோகமென்னப்பட்ட அஞ்ஞா
முழுதும் நஷ்டமாய்ப் போய்விட்டது. (

தாமரையிதழுக்குச் சமானமான நேத்திரத்தையுடைத்தான ப
வானே! தேவரீரிடத்திலேயே சமஸ்தபூதங்களு முண்டாகி ஸ்திதியா
பின் லயமுமடைகிறதென்கிறதையும் அவ்வியயமான உம்முடைய ம
த்துவமும் விஸ்தாரமாக அநுக்ரகஞ்செய்ததனாலே தெரிந்துகொண்
அதனாலே அத்தியந்த சந்தோஷத்தையு மடைந்தேன். (

ஆனாலும் பரமேஸ்பரா! உம்முடைய விசுவரூபத்தை யெவ்வி
மாக அநுக்ரகஞ்செய்தீரோ அவைகளெல்லாம் சத்தியமே, அவை
ளில் எனக்கு யாதொரு சமுசயமுமில்லை. ஆனாலும் புருஷோத்தம
ஞானம், ஐஸ்வரியம், சத்தியம், பெலம், தைரியம், தேயசு இவைக
டன் கூடியிருக்கிற தேவரீருடைய ஈஸ்வரசொரூபத்தைப் பார்க்கவே
ண்டுமென்று மிகவு மிச்சையுண்டானவனா யிருக்கிறேன். (

அருச்சுனனானவன் இன்னமும் எவவிதமாய்ச் சொல்லுகிறானெ
ன்றால், யோகீசுராளுக்கெல்லாம் ஆதாரமா யிருக்கப்பட்ட பரமே
பரரே! உம்முடைய ஸ்வரூபத்தைப் பார்க்கிறதற்கு நான் யோக்யனோ,
அல்லவோ, அது தேவரீரே யறியவேண்டும். தரிசனஞ்செய்ய நா
யோக்யனாயிருந்தால் அவ்வியயனாயும் வியாபகனாயு மிருக்கப்படாநின்
உம்முடைய விசுவரூபத்தை யெனக்குத் தரிசனம் பண்ணிவைக்கவே
ண்டுமென்று அருச்சுனன் பிரார்த்திக்கப் பகவானுந்தயவோடே அ
விசுவரூபத்தைக் காண்பிக்கிறநிமித்தம் சஞ்சயன் சாவதானமாக இ
ந்து பார்க்கவேண்டுமென்று என்ன உத்தரவு சொல்லுகிறாரென்றால்

அருச்சுனா! அநேக நூறுநூறாயும் அநேகம் ஆயிரமாயிரமாய
நானாவிதபேதாபேதங்களாயும் நானாவிதமான திவ்யங்களாயும் பிரகா
க்கிற நானா வர்ணங்களோடும் நானாவிதமான ஆகிர்தி விசேஷங்களோ
டுங்கூடி யிருக்கப்படாநின்ற நம்முடைய ஸ்வரூபத்தைப் பாரென்
சொல்லி. (

இன்னம் துவாதசாதித்தாளையும், அஷ்டவசுக்களையும், ஏகாதச
த்திரர்களையும், அசுவினிதேவதைகளையும், மருத்துதேவதைகளையு
சப்தவாயுக்களையும் நம்முடைய இடத்திலேயே பாரும். அருச்சு

ன்காணுமலும் கேட்காமலும் இருக்கிற இன்ன மனேக ஆச்சரிய
ளுடனே யிருக்கிறவைகளையெல்லாம் நம்மிடத்திலேபார்ப்பாயாக.()

பார்த்தா! நம்மிடத்தி லிருக்கப்படாநின்ற சராசராத்மகமானசகல
ஞ்சங்களும் இப்போது பாரும். அருச்சுனு! நீ என்ன என்ன பார்
வேண்டுமென்று இச்சையுடனே நிச்சயித்திருப்பாயோ அவைகளை
ம் நம்முடைய இடத்திலேயேபார். (எ)

அருச்சுனு! நம்முடைய விசுவரூபத்தை யுன்னுடைய சருமசட்சு
லேபார்க்கச் சக்தனுகமாட்டாய்; ஆனதினுலே யுனக்குத் திவ்யமா
க்கப்படாநின்ற ஞானநேத்திரந் தருகிறேன். ஆனுல் ஈசுரசம்பந்த
ன நம்முடைய யோகமாயையினுடைய பிரபாவத்தையுடைத்தான
முடைய ஸ்வரூபத்தைப் பாரென்று பகவானுனவ ரனுக்ரகஞ் செய்
ரென்று திரிதராட்டிரருக்குச் சஞ்சயர் ஆறுசுலோகங்களினுற் சொ
கிருர். (அ)

வாருமையா திரிதராட்டிரரே ! மகா யோகிகளுக்கெல்லாம் யோ
பரரா யிருக்கப்படாநின்ற பகவானுனவர் அருச்சுனனைப்பார்த்து
க்ரகத்துடனே தம்முடைய சிரேஷ்டமா யிருக்கிற விசுவரூபத்
க் காண்பித்தார். (கூ)

அதெப்பேர்ப்பட்டரூபமென்று கேட்பீரேயாகில், அதன் விபர
சொல்லுகிறேன் கேளும். அநேக முகமும், அநேகங் கண்களும்,
நேக ஆச்சரியங்களும், அநேக ஆபரணங்களும், அநேக ஆயுதங்க
ம்,— (க0)

அநேக திவ்யமாயிருக்கிற பூமாலைகளும், அநேக திவ்யமாயிருக்கிற
ம்பரமுதலான வஸ்திரங்களும், அநேக திவ்யமாயிருக்கிற கந்தங்
தரித்துக்கொண்டிருக்கிறதாயும், அளவற்ற சர்வஆச்சரியகரமாய்ப்
காசித்துக்கொண்டிருக்கிற முகத்தோடேதரிசனங்கொடுத்தார். (கக)

மகாராசாவே ! நானுவிதமான அனந்த ரூபங்களோடுங்கூடின
வரூபமாகப்பட்டது ஆகாயத்தில் அநேக சூரியபிம்பங்களுடைய
தியானது ஏககாலத்திற் பிரகாசித்ததேயாமாகில் அதுகூட அந்த
த்மாவினுடைய பிரகாசத்துக்குச் சரியென்று சொல்லக்கூடாது.
பேர்ப்பட்ட ரூபத்தை அருச்சுனனுக்குத் தரிசனமாகும்படிக்காண்
தார். (கஉ)

மகாராசாவே ! அப்பேர்ப்பட்ட விசுவரூபத்தில்அநேகவிதம்விதங்
யிருக்கப்படாநின்ற சர்வ பிரபஞ்சங்களும் தேவாதிதேவனுயிருக்

இற ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய சரீரமாகிய ஆகாயத்திலிருக்
அருச்சுனனானவன்பார்த்து மிகவும் ஆச்சரியகரத்தை யடைந்தான்.

மகாராசாவே! அருச்சுனனானவன் இப்பேர்ப்பட்ட ரூபத்தை
கண்டமாத்திரத்திலே சந்தோஷத்தை யுடைத்தானவனாய்த் தேகமெ
லாம் மயிர்க்கூச்செறியப் புளகாங்கிதமாகி ஆச்சரியத்தோடே கூடி
வனாய்ப் பகவானைப்பார்த்துச் சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து அ
சலிபந்தனஞ்செய்துகொண்டு பதினேழு சுலோகத்தினாற் றோத்திர
செய்கிறான். (க

சுவாமி! உம்முடைய திவ்யஸ்வரூபத்தி லாதித்தனாதி தேவன
களையும் ரிஷிகளையும்நான்குவிதமான சீவாளையும் மேருவிலிருக்கிற பி
மாவையும் ருத்திரரையும் வசிட்டாதி மகான்களையும் தட்சகாதி சர்
பங்களையுங் கண்டேன். (க()

சனார்த்தன! அனேகங் கைகளோடும், புத்திகளோடும், வதன
களோடும், நேத்திரங்களோடுங் கூடினதாய் அளவற்ற நானாவிதமா
ரூபத்தையுடைத்தாயிருக்கிற தேவரீரை தரிசனஞ்செய்தேன். விசுவ
ரூபத்தையுடைத்தாயிருக்கிற பகவானே! உம்முடைய ஆதிமத்தியாந்
மாகிய மூன்றையுங் காண்கிறதற்கு ஒருவராலுங் கூடாது. (க

அப்பேர்ப்பட்ட ஸ்வரூபத்தை யுடைத்தான வராயும் அநேக
டங்கள் கெதைகள் சக்கரங்களைத் தரித்துக்கொண்டிருக்கிறவராயு
தேயசுகளுக்கெல்லா மிருப்பிடமாயும், எங்கும் பிரகாசிக்கிறவராயு
ஒருவராலும் பார்க்கப்படாதவராயும், பிரகாசிக்கின்ற அக்கினி ஆதி
ணிவர்கள் பிரகாசத்துக்கும் பிரகாசங்கொடுக்கிறவராயும் இன்னப
யென்று நிச்சயிக்கக்கூடாத தேவரீருடையசொரூபத்தைத்தரிசித்தே

மகாராசாவே! இன்னமு மெவ்விதமாய்த் தோத்திரஞ் செய்கி
னென்றால், நாசமின்றியிருக்கப்பட்ட பரப்பிரமஸ்வரூபராயும், தே
ருடைய பதத்தை யடையவேண்டுமென்றெதார்த்தமா யிச்சிக்கப்பட்
முமூட்சுக்களாலே யறியப்படுகிறவராயும், விசுவத்துக்கெல்லாம்ஆத
ராயும், சிரேஷ்டமான காரணராயும், அவ்வியராயும், சாஸ்வதமா
தன்மங்களையிரட்சிக்கிறவராயும், நித்யராயும், புராதனராயும்மோட்ச
வேண்டுமென்கிறபேருக்கு மோட்சரூபமாகவு மிருக்கிறவர் தேவ
தாமேயென்று நானறிந்தேன். (க

இன்னம் ஆதிமத்தியாந்த ரகிதராயும், அனந்த மகிமையை யுடை
த்தானவராயும், அனேக சூரிய சந்திராகிய நேத்திரங்களை யுடைத்
னவராயும், அனேக அஸ்தங்களை யுடைத்தானவராயும், பிரகாசித்

கொண் டிருக்கப்பட்ட அக்கினி முதலானதேயசுகளுக்கெல்லாம் சிரே
ஷ்டமான தேயசு ரூபமாயிருக்கப்பட்ட அனேக வதனங்களை யுடைத்
தானவராயு மிருக்கப்பட்ட தேவரீருடைய சுயம்பிரகாசத்தினாலே சம
ஸ்த பிரபஞ்சங்களும் தாபப்படும்படியாக யிருக்கிற தேவரீரைத் தரிச
னம் பண்ணினேன். (ககூ)

இன்னம் பூமி ஆகாயம் திக்குகள் விதிக்குகள் முதலாகிய எங்கும்
வியாபித்திருக்கிற மகாத்மாவாகிய தேவரீர் அதிக ஆச்சரியகரமாயும்
உக்ரமாயுமிருக்கப்படாநின்ற சொரூபத்தைப்பார்த்து லோகத் திரயங்
களிலுள்ள சகல சீவாளும் மகாபயத்தை யடைந்துகொண்டிருக்கிறார்
கள். (உ0)

இன்னமும் சகலதேவதைகளும் பயப்பட்டுத் தேவரீரைச் சரண
மடைகிறார்கள். இன்னம் சிலபேர்கள் பயப்பட்டவர்களாகி அஞ்சலி
பந்தஞ்செய்துகொண்டு இரட்சிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறார்
கள். மகாரிஷிகளும் சித்தாள் முதலானவர்களும் சுபங்களைவேண்டி
அனேகவிதமாய்த் தேவரீரைத் தோத்திரஞ் செய்கிறார்கள். (உக)

இன்னம்ஏகாதசருத்திராள், துவாதசாதித்தாள்,அஷ்ட வசுக்கள்,
சாத்தியாள்,விசுவதேவதைகள்,அசுவனிதேவதைகள், மருத்துதேவதை
கள்,பிதிர்தேவதைகள், கெந்தருவாள், எட்ச ராட்சச அசுராள், சித்
தாள் இவர்களெல்லாரும் ஆச்சரியத்துடனே திகைத்திருக்கிறார்கள். ()

இன்னம், மகாபுஜா ! அநேக வதனங்களோடேயும் அநேக நேத்
திரங்களோடேயும் அநேக அஸ்தங்களோடேயும் அனேக துடை
களோடேயும் அனேக பாதங்களோடேயும் அனேக உதரங்களோடே
யும் அனேக வாய்களோடேயும் அனேக தந்தங்களோடேயுங் கூடின
தாய் அதிக ஆச்சரியகரமாயிருக்கிற தேவரீருடைய ரூபத்தைக்கண்டு
நானும் பயப்படுகிறேன். லோகங்களிலேயுண்டாகிய சமஸ்தபேரும்
பயப்படுகிறார்கள். (உ௩)

இன்னம் விஷ்ணுமூர்த்தியே ! ஆகாயத்தையளாவிப் பிரகாசமாய்
அனேக வர்ணபேதங்களும் பயங்கரமான வதனங்களும் விசாலமாய்ச்
சொலித்துக்கொண் டிருக்கப்படாநின்ற அனேக நேத்திரங்களையுடைத்
தாயிருக்கப்பட்ட உங்களைப் பார்த்துப் பயமும் பிரமையையுங்கூடின
சித்தத்தையுடைத்தானவனா யொன்றுந் தெரியாதவனாயிருக்கிறேன். ()

இன்னம் கோரதந்தங்களுடனே பிரளயகாலாக்கினிக்குச் சமான
மான பயங்கரத்தோடுங்கூடிய தேவரீருடைய முகத்தைப்பார்த்துத்

திக்குத்திசைகளொன்றும் அறியக்கூடாமலும் சுகமென்னப்பட்ட லேசங்கூட இல்லாமலு மிருக்கப்பட்ட என்னுடைய பயத்தைப்போ குகிற நிமித்தம் ஜெகநிவாசா ! தேவேசா ! சீக்கிரத்திற் பூர்வம்போல பிரசன்னமாய்விடும். (உ

இன்னம் திரிதராட்டிரர் முதலானவர்களுடைய புத்திரர்களாகி துரியோதனுதியானபேர்களும் அவர்களுடனே கூடின இராசாக்க முதலானசேனைகளும் வீஷ்டுமர், துரோணர், கன்னன்முதலானபேரு நம்முடையசேனையில் த்ருஷ்டத்தூய்மன் முதலான இராசாக்களு அதைச்சேர்ந்த சேனைகளும் பிரவேசிக்கிறார்கள். (உ

சுவாமி ! அதிக வேகத்தோடுங்கூடினவர்களாகிக் கோரதந்தங்க டனே பயங்கரமா யிருக்கப்படாநின்ற உம்முடையவாக்கிற்சிலபேர்கள் பிரவேசிக்கிறார்கள். இன்னம் சிலபேர்கள் பல்லுகளுடைய நுனியி அகப்பட்டுத் தேகங்களெல்லாம் பொடிப் பொடியாய்ப் போகிறாப்போ லக் காணப்படுகிறார்கள். (உஎ

சுவாமி ! அனேகவிதமான நதிகளெல்லாஞ் சமுத்திரத்திலேவந்து விழுகிறாப்போலத் தேவரீருடைய முகத்திற் பதினெட்டு அக்ரோண சேனையும் பிரவேசிக்கிறார்கள். (உஅ

இன்னம் சுவாமி ! உம்முடைய மகிமைதெரியாமல் எரிந்துகொண் டிருக்கப்பட்ட தீபத்திலேவிழுந்தால் சாவோமென்று தெரியாமல் விளக்குவெட்டிப் பூச்சியானது வேகத்தோடேபோய் விழுகிறாப்போ இந்த யுத்தத்திலேநிற்கிற சேனைகளெல்லாம் சாவோமென்றறியாமல் உம்முடைய முகத்திலே பிரவேசிக்கிறார்கள். (உகூ

விஷ்ணுமூர்த்தியே ! இந்தச் சமஸ்தராஜாக்களும் அவர்களைச் சேர்ந்த சேனைகளும் சொலிக்கப்படாநின்ற காலாக்கினுக்குச் சமா மான உம்முடையவாயில் அகப்பட்டுக் கொண்டிருக்கிற எல்லாரையு தேவரீரே பட்சிக்கிறீர். அதிக உக்ரமான தேவரீருடைய தேயசான சகல சகங்களையுந் தபிக்கும்படியாகப் பண்ணிவைக்கிறது. (கூ0

இன்னம் தேவதைகளுக்கெல்லாம் சிரேஷ்டமாயிருக்கிறவரே உக்ரசொருபமாயிருக்கப்படாநின்ற தேவரீர் ஆர் ? எனக்குத் தெரியு படி அநுக்ரகஞ்செய்யவேண்டும்; நான்உமக்கு நமஸ்காரஞ்செய்கிறேன் மிகவும் அர்புதமாயும் ஆச்சரியகரமாயு மிருக்கப்படாநின்ற உம்மை யின்னாரென் றறியவேண்டுமென் றிச்சையுடைத்தான எனக்குத் தே ரீர் பூர்வம்போலப் பிரசன்னமாகவேண்டும், எதற்காக இந்தச் சொரு

டுத்தீர், அந்த ரகசியமு மெனக்குத்தெரியும்படி அநுக்ரகஞ் செய்ய
ண்டும். (௩க)

இந்தவிதமாகக்கேட்ட அருச்சுனனைப்பார்த்துப் பகவானுனவர்
ன்ன உத்தரவு சொல்லுகிருரென்றால், அருச்சுனு ! லோகத்தையெல்
ம் சங்கரிக்கிற காலன் நான், உன்னைத்தவிரயிந்த இரண்டுவகைச்
னையிலே யுண்டானபேர்களையெல்லாம் சங்காரஞ்செய்யவேண்டி
ந்த அவதாரஞ்செய்திருக்கிருேம். இவாளையெல்லாம் நீ சங்கரிக்கா
ற்போனாலும் நம்மாலே நாசத்தையடைகிறது நிசமென்றெண்ணு. ()

அருச்சுனு ! ஆனதால், நீ தானே யெழுந்திருந்து யுத்தத்தைப்
ண்ணிச் சத்துருக்களையெல்லாஞ்செயித்து வீஷ்டுமராதியானபேர்
ளையெல்லாம் அருச்சுனன் செயித்தானென்று கீர்த்தியையடைந்து
றைவில்லாத இராச்சியத்தையும் ஆண்டுகொள். இத்தனைசேனைகளும்
மமாலே முதலிலேதானே கொல்லப்பட்டுப் போய்விட்டார்கள். ஆகை
ல் நான் செயிப்பேனோ செயிக்கமாட்டேனோவென்று சந்தேகப்படா
த, அருச்சுனு ! நீ நிமித்தமாத்திரமாகும். (௩௩)

அருச்சுனு ! துரோணுசாரியார், வீஷ்டுமர், கர்ணன், முதலான
ன்கு திக்குகளிலுமிருக்கப்பட்ட ராசாக்கள் முதலானவர்களெல்லாம்
ம்மாலே முன்னமே கொல்லப்பட்டுப் போய்விட்டார்கள். அவர்களை
பல்லாம் நீயும் நிமித்தமாத்திரமாயிருந்து கொல்லு. இதனாலே பயப்
டாயல் யுத்தத்தைப் பண்ணுவாயானால் சத்துருக்களை யெல்லாஞ் செ
க்கப்போகிருயென்று பகவான்சொல்ல. (௩௪)

திரிதராட்டிர மகாராசாவே ! அந்த வார்த்தைகளைக்கேட்ட அருச்
ணனுக்குத் தேகமெல்லாம் மயிர்க்கூச்சலுண்டாகி நடுநடுங்கி, வாய்
ளறி, அத்யந்த சந்தோஷத்தையும்பயத்தையும் அடைந்தவனுயிரண்டு
கையுஞ் சேர்த்துக்கொண்டு பகவானுடைய மகிமையைப்பார்த்து
டிக்கடி நமஸ்காரஞ்செய்து தோத்திரஞ்செய்கிருன். (௩௫)

மகாராஜாவே! எவ்விதமாகத் தோத்திரஞ்செய்கிருனென்று கேட்
தீர்களோ, ரிஷிகேசா ! உம்முடைய மகத்துவத்தைப் பார்த்துத்
தோத்திரங்களைச்செய்துகொண்டு தேவரிஷிகளெல்லோரும்சந்தோஷத்
தை யடைந்து திரும்பித் திரும்பி உம்முடைய சொரூபத்தைப் பார்க்
றதற்குப் பிரியத்தையுடைத்தானவர்களாய் இருக்கிருர்கள். இராட்சச
ணங்களெல்லோரும் பயத்தையடைந்து திக்குகள்தோறும் ஓடுகிருர்
கள், சித்தர் கணங்களெல்லோரும் பத்தி விசுவாசத்துடனே நமஸ்கா
ஞ் செய்கிருர்கள். (௩௬

இன்னம் செகத்துக்கெல்லா மாதாரமாயுங் காரணமாயு மிருக்கி
வரே! பரமான்மாவாகவு மனந்தரூபத்தையு முடைத்தானவரே! தே
வதைகளுக்கெல்லாம் தேவனும் மோட்சரூபமாயு மிருக்கிறவரே! ஜெ
நிவாசா! இன்னமும் பிரமதேவருக்கும் ஆதிகாரணமாயும் சிரேஷ்ட
மாயு மிருக்கிறவரே! சத்து சொரூபமான சீவனுக்கும் அசத்துசொரூ
பமான பிரகிருதிக்கும் பரனும் அட்சரமான பரப்பிரமசொரூபரா
மிருக்கிற வுமக்கு யார்தான் நமஸ்காரஞ் செய்யாம லிருப்பார்கள். (

இன்னம் ஆதிதேவனையும், புராணனையும், புருஷனையும், விசுவ
துக்குப் பரமமான காரணமாயு மிருக்கிறவரே! சமஸ்தத்தையு மறிகி
வராயும், சமஸ்தரூபங்களாயுஞ், சிரேஷ்டமான மோட்சவீடாக
மிருக்கப்பட்ட தேவரீரே அனந்த ரூபராயும் விசுவமெல்லாம் வியாபி
கப்பட்டிருக்கிறீர். (௩அ

இன்னம் வாயுவு, அக்கினி, இயமன், வருணன், சூரியன், சந்திரன்
பிரமாவுக்குப் பிதாவாகிய விஷ்ணுவுந்தேவரீர் தாமே, அப்பேர்ப்பட்ட
தேவரீருக்கு அனேகந்தரம் முன்னும் பின்னும் நமஸ்காரமென்று
அடிக்கடி நமஸ்கரித்து. (௩௯

தேவரீர் சமஸ்த பிரபஞ்சத்தையும் வியாபித்துக்கொண்டிருக்கிற
படியினாலே சருவமுந் தாமே ஆதியந்தமில்லாத வீரியத்தை யுடை
தானவரே! அபரிமிதமாய்ப் பராக்ரமத்தை யுடைத்தானவரே! உமக்கு
முன்பாகவும் பின்பாகவும் நமஸ்காரம் எங்கும் நமஸ்காரம். (௪0

அருச்சுனனானவன் மிகவுஞ் சிரத்தாபத்தியுடனே அபிமுகம் பண்
ணிக்கொள்ளுகிறான். சுவாமி! உம்மைச் சினேகிதனென்கிற பிரி
பெலத்தினாலே ஏ கிருஷ்ணா! ஏ யாதவா! ஏ மைத்துனா! ஏ சிநேகித
வென்றும் இன்னமும் பலவிதமா யும்முடைய மகிமையையும் ஸ்வரூ
பத்தையும் அறியாமல்நான் மோகவசத்தினாலேயுஞ் சினேகத்தினாலேயு
என்ன என்ன பேசியிருக்கிறேனோ அத்தனையும். (௪க

இன்னம் விவகாரகாலங்களிலுங்கூடப் படுத்துக்கொண்டிருக்கி
போதும் விளையாடுகிறபோதுங் கூடவிருக்கும்போதும் போசனஞ்
செய்கிறபோதும் சபைகளி லிருக்கும்போதும் மனோவாக்குக் கா
சன்மங்களினா லென்னென்ன அபசாரஞ்செய்தேனோ அச்சுதா! அவை
களையெல்லாம் அப்பிரமேயமா யிருக்காநின்றதேவரீர் சகித்துக்கொள்ள
வேண்டுமென்று சாஷ்டாங்கமாகத் தெண்டம்பண்ணி அவர் மகிமை
யை யின்னமுந் தோத்திரஞ் செய்கிறான். (௪௨

ஓய் மகாராசாவே ! ஒருவராலு மறியக்கூடாத பிரபாவத்தை
டைத்தானவரே ! சராசராத்மகமான இந்த லோகத்துக்குப் பிதாவும்
யரும் குருக்களுக்கெல்லாங் குருவுந் திரிலோகத்திலு முமக்குச்
னமா யொருவரு மில்லையென்றாற் சிரேஷ்டமுண்டென்று எங்கே
ல்லுகிறது. (சங)

ஆனதால் லோகத்துக்கெல்லாம் பகவானாயிருக்கிறவரே ! தேவரீ
நமஸ்கரிக்கிறேன். செகதீசுரனாகியுந் தோத்திரங் களுக்கருகராயு
கப்படாநின்ற தேவரீரை வேண்டிக் கொள்ளுகிறேன். புத்திரர்
டைய அபராதங்களைப் பிதாக்களும், சினேகிதன்செய்த அபராரத்
சினேகிதனும், பிரியமா யிருக்கப்பட்ட ஸ்திரீசெய்த அபசாரத்
அன்புடைய பர்த்தாவும் எப்படிச் சகிப்பார்களோ அப்படிப்
ல அஞ்ஞானதிசையினா லென்னால் நடந்த சகல அபராதங்களையும்
ரீர் தயாளுவானதனாலே க்ஷமைசெய்து கொள்ளவேண்டும். (சச)

இன்னம் முன் எப்போதும் பார்க்காமலிருக்கப்படா நின்ற உம்
டைய ரூபத்தைப்பார்த்துக் கிருதார்த்தனானேன். ஆனாலும் என்
டைய மனதானது பயத்தினால் மிகவும்வியாகுலத்தையடைந்திருக்
து. ஆகையா லும்முடைய பூர்வரூபத்தைப்பார்த்தா லெனக்குச்
தோஷமுண்டாகும். அதனால் தேவேசா ! ஜெகநிவாசா ! இப்போது
ரூபமாகத் தரிசனஞ் செய்துவைக்கவேண்டும். (சரு)

இன்னம் அனேகம் புஜங்களுடன் கூடினவரே ! விசுவமே ஆகிர்
க உடைத்தானவரே ! கெதாயுதசகிதமாய்க் கிரீட குண்டலங்கள்
துச் சதுர்ப்புயங்களோடே சவுமியமான தேவரீருடைய பூர்வ
ரூபத்தைக் காண்பிக்கவேண்டும். (சகூ)

அவதாரிகை:—தற்பத வாச்சியார்த்த முழுமையும் தன்னைத்தவிர
ணியமில்லையென்கிறபோதம் அருச்சுனனுக்கு உண்டாகவேண்டு
ன்று இந்த விசுவரூபதரிசனஞ் செய்து வைத்தபடியால் அதனு
ய பெருமையைப் பகவானானவர் மூன்று சுலோகத்தினாற்சொல்லு
. அருச்சுனா ! என்னுடைய யோகமகத்துவத்தினாலே யிப்போது
ன்னமாயிருக்கிற உத்தமமான ரூபத்தை யுன்னிடத்தி லிருக்கிற
க்ஷத்தினாலே நீ காணும்படியாகச்செய்வித்தேன். தேசோமயமாயும்
வாத்மகமாயும் ஆதியந்தமில்லாமலிருக்காநின்ற ரூபத்தை நீ யொரு
கண்டாயேதவிரப் பூர்வத்தி லாருங்காணவில்லை. அதனாலே அருச்
! நீ கிர்தார்த்தனாய். (சஎ)

இன்னம் வேதசாஸ்திரங்கள் வாசித்து அர்த்தங்களைத் தெரிந்... லும், எக்யாதிகள் செய்ததனாலும், அக்கினி ஹோத்திராதி கிரியை... லும், சிரேஷ்டமான தானங்களினாலும், உக்ரமான தபசுகளினா... இன்னமும் பலவிதமான கன்மங்களினாலு மறியக்கூடாத அனே... மான ரூபங்களை யுடைத்தான விசுவரூபமாகிய நம்மையிந்தமனுஷ... கத்திலுன்னைத்தவிர வேறொருவரும் பார்க்க நாம் சக்தியமாக... டோம்.

அருச்சுனா! ஆனதால் இப்படிப்பட்டரூபத்தை நீதியானஞ்செ... வேண்டி யுனக்குக் காண்பித்தோம். அதைப்பார்க்கஉனக்குப் பய... மாயும் வியாகுலமாயும் மூடபாவமு முண்டாயிருப்பதாக நீ செ... கிறபடியால் அவைகளெல்லாம் நீ யினிமே லடையாமல் சந்தோ... தனைச் சவுமியமான நம்முடைய பூர்வரூபத்தைப் பாரென்று ப... னவர் விசுவரூபத்தை மறைத்துக் கிருஷ்ணமூர்த்திரூபமாய்க் ... பிவித்தார்.

மகாராஜாவே! கேளும், இவ்விதமாய் வாசுதேவரானவர், ... தையடைந்திருந்த அருச்சுனனைப்பார்த்து மிருதுவான மதுர... யங்களினாற் சமாதானஞ்செய்து மறுபடியுஞ் சவுமியமான தன்னுடை... பூர்வரூபத்தைக் காண்பிவித்தார்.

இப்படிப்பட்டசவுமியரூபத்தைப்பார்த்து அருச்சுனனானவ... விதமாய்ச் சொல்லுகிறானென்றால், சனார்த்தனா! உம்முடையசவுமி... கிய மனுஷரூபத்தைப்பார்த்து இப்போதல்லவாபூர்வம்போல பிர... சித்தத்தை யடைந்தவனானேனென்று சொல்ல.

பகவானானவர் அருச்சுனா! ஆராலுங் காணுகிறதற்குச் சக்... காத நம்முடைய ஈஸ்வரஸ்வரூபமாகிய விசுவரூபத்தை நீ பார்த்... தேவதைகள் முதலானவர்களு மிதுவரைக்கும் பார்த்தவர்களல்ல... னால் எப்போது மிந்த விசுவரூபதரிசனத்தைப் பார்க்கவேண்டுமெ... கோரிக்கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட ரூபத்தை யுன... தியானஞ் செய்யவேண்டி நாம் காண்பித்தோம்.

அருச்சுனா! இவ்விதமாய்க் காணுகிறதற் கபுரூபமாய்ப்போன... னென்று கேட்பாயேயாகில், இப்போது நீ பார்த்த விசுவரூபமாகி... மை யெதார்த்தமாயறிந்து பிரீதிபூர்வமாகப் பக்திசெய்யாமல் வே... தியயனங்கள் செய்கிறதனாலேயுந் தவங்களாசரிக்கிறதனாலேயுந் ... கள் கொடுக்கிறதனாலேயும் எக்யங்கள்செய்வதனாலேயும் நம்மை... போதுங் காணமாட்டார்கள்.

ந்துருசம்மாரனுகிய அருச்சுனு ! பின்னை யாருக்குத்தான் இந்த
ாணப்படுமென்று கேட்பாயேயாகில் இதர தேவதைகளை யுபாசி
லென்னைத்தவிர அன்னியமில்லையென் றென்னையே யார் பத்தி
ருர்களோ அவர்களுக்குச் சாத்திரங்களினுலேயுமறியப்படுவேன்
ாயிருக்கப்பட்ட சித்தத்துக்குங் காணப்படுவேன். இப்பேர்ப்
நானே யவர்களென்று தெரிந் தனுபவிக்கும்படியாக நான் சுனு
முடன்பட் டிருப்பேன். (ருச)

புருச்சுனு ! சகல சாஸ்திரங்களினுடைய சாராம்சமாகியும் பரம
மாயு மிருக்கப்பட்ட தெதுவோ அதைச் சங்க்ரகமாக உனக்குச்
லுகிறேன்கேள். யாதொருவர் நம்மையுந்தேசித்துப் பிரியத்தோ
டி நிட்காம கன்மங்கள் செய்கிருர்களோ, நம்மைத்தானே பரம
ார்த்தமாக எண்ணுகிருர்களோ, நம்மைத்தானே யாசரித்தவனு
த்திரயங்களைவிட்டு நம்மையே அநனியமாகப் பத்திசெய்கிருர்
, ஒருவரிடத்திலும் வயிரமின்றி யாரிருக்கிருர்களோ, இத்தியாதி
களுடன்கூடின யாதொரு புருஷானுண்டோ அவர்கள்தான் நம்
ய சொரூபத்தையடைவார்கள். (ருரு)

தவதைகள் முதலாய்க் காணப்படாத விசுவரூபத்தைக் காண்
தைப் பார்க்கவேண்டுமென்ருல் பத்தியின்றிக் கூடாதென்று போ
யாதொரு பகவானுண்டோ அவருக்கு நமஸ்காரம்.

பதினொராவது
விசுவரூப அத்தியாயம் முற்றிற்று.
ஆக அத்தியாயம் கக-க்குச் சுலோகம்-சசுசு.
பரமகுருவேதுணை.

---

உ
ஸ்ரீநவநீதசவாகாராயநம:
பன்னிரண்டாவது

## பத்தியோக அத்தியாயம்.



வதாரிகை:—நிர்க்குணோபாஸ்தி சகுணோபாஸ்தி இந்த இரண்
தகாபிமானத்தோடுங்கூடின புருஷனுயிருந்துகொண்டு நிர்க்கு
ஸ்தி செய்கிறதைக்காட்டிலுஞ் சகுணோபாஸ்தி சிரேஷ்டமென்
ிந்த அத்தியாயத்திற்சொல்லத்தொடங்குகிருர்.

சுவாமி! சகுணரூபமாகிய விசுவரூபத்தை யுடைத்தானவனு சர்வஞ்ஞாதி குணங்களுண்டானவனாகிய உம்மை யறிந்து உம்மி திலேயே மனதைநிறுத்தி உம்மை யுபாசிக்கப்பட்ட பக்தா ளும் யடைவார்களென்று பதினோராமத்தியாயத்தின் முடிவில் அநுக்ர செய்தீர்கள், அட்சரமாயும் அவ்யக்தமாயு மிருக்கப்படாநின்ற குணமாகிய பரப்பிரமசொரூபத்தையும் சிலபேர்களுபாசிப்பார்களெ றும் அநுக்ரகஞ் செய்திருக்கிறீர்கள். இவர்களிலே சிரேஷ்டாளா அவர்களைத் தெரியும்படி யநுக்ரகஞ்செய்யவேண்டும்.

அருச்சுனா! சர்வஞ்ஞாதிகுணங்களுண்டாகிய பகவானா யிரு நம்மிடத்திலே யாதொருவர் மனதைவைத்து நித்யமுந் தியானவ ளாய் நம்முடைய நிமித்தமாக நிட்காமகன்மங்களைச் செய்துகொ எதார்த்தமான சிரத்தையுடனே நம்மையே யுபாசிக்கிறார்களோ அ களே சிரேஷ்டாள்.

சுவாமி! நிர்க்குணோபாஸ்தி செய்யப்பட்டவாள் சிரேஷ்டம வா? அருச்சுனா! அப்படி நினைக்கவேண்டாம் எதனாலென்றால், சரமாயின்னபடியென்று சொல்லப்படாததாயும், நாமரூபங்களில் தாயும், சாஸ்வதமாயும், எங்கும் பரிபூரணமாயும், சிந்திக்கக் கூட தாயும், மாயைக்கதிட்டானமாயும் யாதொரு விகாரங்களுஞ் சல மின்றிக் கூடஸ்தராயு மிருக்கப்பட்ட நம்முடைய ஸ்வரூபத்தை யி யங்களெல்லாம் நிக்ரகஞ்செய்து எங்கும் சமபுத்தியாய்ச் சர்வ பூ களுக்கும் இதஞ்செய்கிறபேரா யாதொருவ ருபாசிக்கிறார்களோ அ களுஞ் சிரேஷ்டாளே, அவர்களும் நம்மையே யடைவார்கள்.

என்றசொல்லானது அவனேநானென்றுநீயறியவேண்டும். அருச் பாரதாநிர்க்குணோபாஸ்திசெய்கிறதுமிகவுமருமையென்பதைச்சொ கிறேன்கேள். அவ்யக்தராயும் பரப்பிரமமாயும் நிர்க்குணமாயும் இ கப்படாநின்ற ஸ்வரூபத்தை யுபாஸ்திசெய்யப்பட்ட ஞானம் மிக சிரேஷ்டமே, அதற்குச் சமஸ்த பூதங்களிடத்திலேயுந் துவேஷங்க லாமல் மைத்திரியாதியுடன் தயாவந்தனாய்த் தேகத்தைத் தானெ அகந்தையும் விஷயங்களிற் றன்னதென்கிற மமதையு மில்லாமற் துக்கங்களிடத்திற் சமமான புத்தி யுண்டானவனாயிருந்துகொ அவ்யக்தமான பரப்பிரமசொரூபத்தினிடத்தில் ஆசக்தியான சி தையுடைத்தானவனாய் நிர்க்குணோபாஸ்தி செய்யவேண்டும். அப் கில்லாமல் தேகாபிமானத்துடன் கூடினவர்க ளெத்தனைப்ப களேயாகில் அதிகக்கிலேசமுண்டாயிருக்கும். அதனால் நிர்க்கு பாஸ்திசெய்கிறது பிரயாசமானதால் அதைவிட விசுவரூபமாகிய

தியானஞ் சிரேஷ்டம். அந்தச் சகுணத்தியானத்தைக்காட்டிலும் ன மரணத்தைக் கொடுக்கத்தக்கதான சங்கற்ப விகற்பங்களைச் யப்பட்ட மனமுதலான இந்திரியங்களெல்லாஞ் சாந்தியடையும் ாகச் செய்யப்பட்ட கன்மபலத்தியாகம் சிரேஷ்டமாகும். (ச-ரு)

அருச்சுனா! ஆகையால் நம்முடைய பத்தாள் எளிதாக மோக்ஷ டகிறதற்குச் சாதகமான கன்மபலத் தியாகத்தினுடைய சிரேஷ் தைச் சொல்லுகிறேன்கேள். எவர்களாகிலுஞ் சமஸ்த கன்மங்களை திபூர்வமாக நம்மிடத்திற் சமர்ப்பித்து வேறே தேவாந்தரங்களை பியாமல் நம்மையே பரமபுருஷார்த்தமென்றெண்ணி யிதரசிந்தை ாத பத்தியோகத்தினாலே நம்மையே தியானஞ்செய்துகொண் பார்களாகில் அவர்களும் நம்முடைய சொரூபத்தையே யடை கள். (சா)

சுவாமி! இந்தக் கன்மங்களினாலேயுந் தியானத்தினாலேயும் அதை படியடைவார்கள்? அருச்சுனா! நம்மிடத்தில் நிறுத்தப்பட்ட சித் தயுடைத்தான பக்தாளுக்கு நாம் சீக்கிரமாக மிருத்தியோடுங் ய சம்சாரசாகரத்தி லிருந்துங் கரையேற்றி வைக்கப்பட்டவ வாம். (எ)

அருச்சுனா! நீயும் நம்மிடத்திலேயே மனதைநிறுத்தி நம்மிடத்தி ய புத்தியுண்டானவனாய் விசுவரூபமாகிய நம்மையே தியானிப்பா ல் நம்முடைய அநுக்ரகத்தினாலே ஞானம் லப்தமாகித் தேகாந்தத் சாயுச்சியமாகிய நம்முடைய சொரூபத்தையே யடைவாய். இதற் சமுசயமில்லை. (அ)

அருச்சுனா! இவ்விதமாய்ச் சித்தத்தை ஸ்திரமாய் நம்மிடத்தில் ந்த அசக்தனாயிருப்பாயேயாகில் நம்மை யெவ்விதமும் அடையவே மென்று நிச்சயித்தபுத்தியினாற் பாகியத்தில் நமக்குப் பிரீதிகரமா ிட்காமகன்மங்களைச் செய்துகொண்டு பூர்வஞ்சொன்னபடி யோ பியாசத்தினாலே நம்மைத்தியானஞ் செய்துகொண்டு வருவாயாகில் போது மனதிலுண்டான விட்சேபங்களெல்லாஞ் சுத்தமாய் விடு நம்மையே யடையலாம். (கூ)

அருச்சுனா! இந்த யோகாப்பியாசஞ்செய்யச் சமர்த்தில் லாதவனா தால் எனக்குப் பிரியகரமாயிருக்கப்படாநின்ற ஏகாதசியுபவாச லான விரதங்களுடன் நாமகீர்த்தனங்கள் முதலாகிய சற்கருமங் செய்துவருவாயாகில் அதனாலு மோக்ஷத்தையே யடைவாய். ()

அருச்சுனா! இதற்குஞ் சக்தியில்லாதவனா யிருந்தாயாகில் ந
யெல்லாவற்றிற்குங் கதியென்று நம்மைத்தானே சரணமடைந்து ம
நிக்கிரகத்துடனே கூட நீ செய்யப்பட்ட சகல கன்மங்களையும் அ
களின் பலன்களையும் எனக்கே யற்பணஞ்செய்துகொண்டு எல்
பாரத்தையும் நம்மிடத்திலேயே பொறுப்பாய் வைப்பாயேயானால்,
னாலே நம்முடைய அநுக்ரகமுண்டாய்க் கிருதார்த்தனாய்விடுவாய்.(

அருச்சுனா ! நம்மை ஞானமின்றி யேகதேசமா யுபாசிக்கிறவ
காட்டிலும் பரோட்சஞானஞ் சிரேஷ்டம். அந்தப் பரோட்சஞா
னத்தைக்காட்டிலும் விசுவரூபத்தியானஞ் சிரேஷ்டம். அந்த விசுவரூ
தியானத்தைப் பார்க்கிலுஞ் சற்கருமங்கள்செய்து அந்தப் பலன்களை
தியாகஞ்செய்யப்பட்டது மிகவுஞ் சிரேஷ்டம். அந்தக் கன்மபல
யாகத்தினாற் சனன மரணமென்னப்பட்ட சற்கற்ப விகற்பங்கள்
லான சுகதுக்கங்கள் யாவுஞ் சாந்தியடைந்து நம்முடைய சொரூப
கிய மோக்ஷத்தையே யடைவார்கள். (

சுவாமி ! தேவரீருடைய பக்திசெய்யப்பட்ட பக்தாளானவர்
தேகாந்தத்தில் மோட்க்ஷமடைகிறது நிச்சயமாயிருந்தபோதிலும் அ
களை நான் தெரிந்துகொள்ளும்பொருட்டுத் தேகத்துட னவர்கள்
கும்போது எவ்விதமான குணங்களுடன் கூடியிருப்பார்கள் ? அ
சுனா ! எட்டுச் சுலோகத்தினாற் சொல்லுகிறேன்கேள். லோகத்தில்
கப்பட்ட சமஸ்த பூதங்களிடத்திலேயுந்துவேஷமின்றியிருப்பன்; த
குச் சமானமாகிய பேர்களிடத்தில் மைத்திரியமென்னப்பட்ட சி
கஞ் செய்வான்: தீனரா யிருக்கிறபேர்களிடத்திற் கருணை செய்வ
பெண்சாதி பிள்ளைகளிடத்தில் மமத்துவமில்லாமலுந் தேகத்தை
னென்கிற அகங்காரமின்றியு மிருப்பன்; துக்கங்களிடத்திலுஞ் சு
களிடத்திலுஞ் சமானபுத்தியுடைத்தானவனாகவும் பூமாதேவிை
போற் பொறுமையுடையவனாகவுமிருப்பன். இவன்தான் நம்முடை
பக்தன். (

இன்னமு மெப்போதுஞ் சந்தோஷமுள்ளவனாகவும் என்னை
விர அன்னியமில்லையென்கிறதில் திடநிச்சயமும் ஆத்மஞானம்
தானமாக மனதும் புத்தியும் நம்மிடத்திலேயே சமர்ப்பித்தவ
முண்டானவனெவனோ அவனே நம்முடைய பக்தன், நமக்குப் பிரி
மாவன்.

அருச்சுனா ! இன்னமும் லோகத்திலுள்ள சகல சீவனுக்கு (
னாலே பயமில்லையோ எவனுக்குச் சகல சீவர்களாலும் பயமில்லை

துசம்பவித்தாற் சந்தோஷமும் பிறர்க்கு நன்மைவந்தாற் பொரு யுங் குரோதமு மனச்சோபமு மெவனுக்கில்லையோ அவன்தான் முடையபக்தன். (கரு)

அருச்சுனா ! இன்னமும் எந்தவஸ்துவையுந் தான் அபேட்சியா ம் பலவந்தமாய்வந்த விஷயங்களி லாசையின்றியும் சோம்பலும் டயுமின்றிப் பாகியத்திலு மாந்தரத்திலுஞ் சுசியுண்டானவனும் ாயபுத்தியோடும் பட்சபாதமில்லாமலும் மனோவியாதியில்லாதவனு நம்மை யடைவதற்கான எத்தனத்தைத்தவிர மற்ற சர்வமுயற்சி யும் விட்டவனு மிருக்கப்பட்டவ னெவனோ அவனே நம்முடைய தன். (கசா)

அருச்சுனா ! இன்னமும் பிரியத்தைக்கொடுக்கத்தக்க நல்ல விஷ கள்வந்தா லதனாற் சந்தோஷியாமலும் அப்பிரியத்தைக் கொடுக்கத் க பொல்லாதவிஷயங்கள்வந்தால் அதனால் துக்கப்படாமலும் பிரிய ன வஸ்துக்கள் வியோகமானாலதனாற் சோகத்தையடையாமலும் ர்க்காதிமுதலாய் வாராதவஸ்துக்களைக் கோராமலும் சுபாசுபரூபங் ான புண்ணிய பாபங்களைவிட் டென்னிடத்திற் பக்திசெய்யப்பட்ட ணவனோ அவனே நம்முடைய பக்தனும் பிரியனுமாவன். (கஎ)

அருச்சுனா ! இன்னமுஞ் சத்துருவினிடத்திலும் மித்துருவினிடத் வம் மானதினிடத்திலும் அவமானத்தி னிடத்திலுஞ் சீதோஷ்ண துக்கங்களிடத்திலுஞ் சொப்பனம் போலெண்ணிச் சமபுத்தியுண் னவனும் நம்முடைய பக்தியில்லாத சங்கத்தைச்சேராமல் விவர்ச் னுயிருக்கப்பட்டவனெவனோ அவனே நம்முடைய பக்தன். (கஅ)

அருச்சுனா ! இன்னமு மொருவர்செய்யப்பட்ட நிந்தையிலுந் துதி லுஞ் சமசித்தத்தை யுடையவனும் எப்போதுமேகாந்தத்தையிச்சித் கொண் டிருக்கப்பட்டவனுந் தானிச்சியாமலிருக்கத் தெய்வாதீன ப்வந்த பொருளைத் தள்ளாமலும் அதனாலே திருப்தியடைந்தவனு வாராதபொருளிலே யபேட்சையின்றியும் இன்னவிட மிருக்கிறது ன்னவிட மிருக்கக்கூடாதென்கிற நிலவரமின்றி ஸ்திரபுத்தியுடன் நம் த்திற் பக்தியுண்டானவனெவனோ அவனே யெனக்குப் பக்தனும் யனுமாவன். (கசு)

அருச்சுனா ! எவர்களாகிலுஞ் சிரத்தாபத்தியோடுங் கூடினவர் ாகி நாமே பரமபுருஷார்த்தமென்றெண்ணியிப்போது நாம்சொன்ன ாக்ஷசாதகமான கருமங்களை யெதோத்தமா யாசரிப்பார்களேயாகில் படிப்பட்ட பத்தாள் நமக் கத்யந்த பிரியமுண்டானவர்களாவார்

கள்; அதனு லவர்களுக்குப் பிரகிருதிபுருஷனையும் க்ஷேத்திரம் க்ஷே
திரக்ஞனையும் ஞானம் ஞேயத்தையும் பிரித்தறியும்படியானஞானத்
நான்கொடுத்து எல்லாவற்றிற்குஞ் சிரேஷ்டமாயிருக்கிற நம்முடை
சொருபத்தை யடையும்படியாகவுஞ் செய்விப்போம். இந்தப்பிரகா
நிர்குணோபாஸ்திசெய்கிறது பிரயாசமாகையால் எளிதாக மோக்ஷ
ஷ்ரவேண்டிச் சகுணோபாஸ்தி நல்லதென்று பகவானுனவர் அநுக்
கஞ்செய்த விபரத்தைத் திரிதராட்டிரருக்குச் சஞ்சயர்சொன்னர்

தேகாபிமானத்தோடுங்கூடிய புருஷாள் சகுணோபாஸ்திசெய்து
மோக்ஷத்தையடையலாமென் றெந்தப்பகவானுலே சொல்லப்பட்டதோ
அவருக்கு நமஸ்காரம்.

பன்னிரண்டாவது

பத்தியோக அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் கஉ-க்குச் சுலோகம்-௪அகூ.

ஸ்ரீபிருந்தாவனவாசப்பிரியாயநம:

---

ஸ்ரீகோடிசூரியசமப்பிரபாயநம:

பதின்மூன்ருவது

## பிரகிருதிபுருஷவிபாகயோக அத்தியாயம்.

---

அவதாரிகை:— பக்தாளைச் சம்சாரத்தில்நின்று மெளிதா
கடைத்தேறப் பண்ணிவைப்போமென்று பன்னிரண்டா மத்தியா
திற்சொன்ன பத்தி சித்தியாகவேண்டி யிந்த அத்தியாயத்திலே தத்
ஞானத்தை யுபதேசஞ்செய்கிருர். கேசவா! பன்னிரண்டா மத்தியா
தின் முடிவிற் பிரகிருதி புருஷன் முதலானவைகளையும் பிரித்தறி
படியான ஞானத்தைக்கொடுத்து மோக்ஷமடையும்படியாகவுஞ் செ
விப்போமென் றநுக்கிரகஞ்செய்தீர்கள், அப்படிப்பட்ட பிரகிருதி
யும் புருஷனையும் க்ஷேத்திரத்தையும் க்ஷேத்திரக்ஞனையும் ஞானத்
யும் ஞேயத்தையும் விபரமா யடியேனுக்குத் தெரியும்படி யநுக்கிர
பண்ணவேண்டும். (

அருச்சுன! சீவனுனவனுக்குப் பாவபுண்ணியங்களினுலே சம
வித்த போகங்களை யனுபவிக்கச் சாதனமாயிருக்கப்பட்டது எதுவோ
அதற்குச் சேத்திரமென்றும் அந்தச் சேத்திரத்தைத் தன்னதென்

